உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

விருத்தாசலத்தில்

ஸ்ரீபெரியநாயகியார் வரப்பிரசாதியாய்

எழுந்தருளியிருந்த

# ஸ்ரீகுமாரதேவர்

திருவாய்மலர்ந்தருளிய

# சாத்திரக்கோவை.

இஃது

பூவிருந்தவல்லி

கந்த [illegible] ராரால்

[illegible] பம் அவரது தவத்து [illegible] ப்பா [illegible]

[illegible]

செங்கீர்குப்பம்

## கன்னியப்பமுதலியார்

அவர்களது

கமலாலயவிலாசஅச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சுஅஅச வ[illegible]

சிவமயம்.

# ஸ்ரீகுமாரதேவர்சரித்திரம்.

ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த ஸ்வரூபமே ஓருருவாகத் திருமேனி கொண்டருளிய ஸ்ரீகுமார தேவர்முற்பிறப்பில்பரமசிவத்தைநோக்கி-மல்லிகார்ச்சுன பர்வதத்தில் நிஷ்காம தவஞ்செயகையில்அந்தச் சுவாமிகளோடுகூட வேறொருவர் அந்தப்பர்வதத்தின் கண்ணே தவஞ்செய்துக்கொண்டிருந்தார் அப்போது பரமசிவம் அவரது தவத்திற்கிரங்கிப்பிரத்திய‌ட்சமாய் எழுந்தருளிவந்து உனக்கு என்னவரம்வேண்டுமென்று கேட்குமளவில்அவரோ ஒன்றைக்கருதி ஒன்றைக்கேட்டமாத்திரத்தில் பரமசிவம்திருவுளத்தில் முனிவுகொண்டு அடா நீசடாமுனியாகக்கடவாயென்று சபிக்க அதுகேட்டு அவரும் திடுக்கிட்டெழுந்து நின்று சுவாமீஇந்தச்சாபம் அடிமைக்கு எந்தக்காலத்தில் விமோசனமாகுமென்றுகேட்க அடா நீபோய் விருத்தாசலத்தில் மணிமுத்தாநதிக்கரையிலிருக்கின்ற அரசமரத்தின்மேலிருந்தாயா

ஸில் இந்தப்பர்வதத்தில் உன்னோடுதவஞ்செய்து நி
ற்கின்ற எமது அன்பனாகிய ஒருவன் கன்னடதேய
த்தில் ராஜனாகவவதாரஞ்செய்து சிறிதுநாள் அரசுப
ண்ணி பிற்பாடு விர்த்தியுண்டாய் பேரூரையூர்ச் சாந்த
லிங்கசுவாமிகளிடத்தில் அனுக்கிரகம்பெற்றுக்கொ
ண்டுமேற்படி ஆசிரியருத்தரப்படி விருத்தாசலம்வ
ந்து நீஇருக்கின்ற அரசமரத்தினிழலில் உட்காருவா
ன் அப்போது நீ அவனைக்கண்டுவணங்கிக்கேட்டா
ல் அவன்விமோசனஞ்செய்வானென்று திருவாய்ம
லர்ந்தருளியமாத்திரத்தில் அந்தஜடாமுனியும் சுவா
மீ அவருக்கு முத்திச்சித்தி எப்போதென்றுகேட்க
அடா இந்தஅன்பன் இதற்குமுன்னர் ஐந்துசுத்த
தேகமெடுத்து நம்மை நோக்கி நிஷ்காமதவஞ் செய்
திருக்கிறான் இந்த ஆறுவதுதேகம் இன்னம் ஒரு
தேகத்தில் முத்தியைப்பெறுவானென்றருளிச்செய்
ய அதுகேட்டு ஜடாமுனியும் பாக்கியமென்று சுவா
மியிடத்தில் விடைபெற்றுக்கொண்டுபோய் மேற்
சொல்லிய அரசமரத்தின்மேலிருந்து எப்போதுவி
மோசனகாலம்நேரிடுமென்று வழிபார்த்துக்கொண்
டிருந்தான். குமாரதேவரோவென்றால் பரமசிவத்தி
ன் திருவருட்படி அருளே திருவுருவாகக்கொண்ட
போதிலும் ஆசிரியர் வேண்டியிருப்பதால் கன்னட
தேயத்திலவதரித்துசிறிதுநாளரசுசெய்து துறவுபூண்

ஒருநாள் தம்மிடத்திலுள்ளமந்திரிமார்களில்முதல் மந்திரியானவரால் தமது சரித்திரமுழுதும் பேறையூர்ச்சாந்தலிங்கசுவாமிகளுக்குத்தெரிவித்தபின்புதாமேபோய் சுவாமிகளைக்கண்டு வணங்கிநிற்க அதுதெரிந்து சுவாமிகளும் இவரதுபரிபாகத்தை நோக்கும்பொருட்டு தம்மிடத்திருக்கும் கையேட்டுத்தம்பிரானைப்பார்த்து அப்பா இவனைப்பார்த்தால் அரசனைப்போலிருக்கின்றது இவன் இந்தவழிக்குப்பாத்திரனானல்ல ஆதலால்இவனை அரசுக்கேபோகும்படி சொல்லென்றுசொல்ல அதற்கு அந்தத்தம்பிரானும் சுவாமீ அந்த ராசனிடத்தில் அதிதீவிரபக்குவமுடைய சற்சிஷருக்குள்ள பதினெண்குறியும் உடையாயிருக்கிறதே என்று சைகையாகச்சொல்ல சுவாமிகளும் முன்பே அறிந்திருப்பதால் இவனைநமதுஎருதுக்குப்புல்லறுத்துப் போடச்சொல்லென்று கட்டளையிட்டருள அப்படியேதம்பிரான் அரிவாளும் புல்லுகட்டும் கயிறுங்கொடுத்தனுப்ப மேற்படிகுமாரதேவரும் அந்தத்திருப்பணியைச் சிரசாவகித்துக்கொண்டு வயலுக்குப்போய்பள்ளர்கள் புல்லருப்பதைப்பார்த்து தாமும் அருக்கவென்று இடக்கையால் புல்லைப்பற்றி வலக்கையிலுள்ள அரிவாளைப்புல்லின்மேற்பூட்டாமல இடக்கை மேற்பூட்டிவிழுக்கையறுப்பட்டமாத்திரத்தில் மேற்படி வலக்கையைப்பார்த்து

கோபித்தார் இந்த அதிசியத்தை மேற்படி பள்ளர்க ள்கண்டு நீர்யாரென்றுகேட்க நான் இன்னசுவாமிக ளுடைய வாகனத்திற்குப்புல்லறுபபவனென்றுசொ ல்ல அதுகேட்டு அவர்கள் ஆச்சிரியமடைந்து இவ ர்அரசனைப்போயிருக்கிறதென்றெண்ணி தாங்களே புல்லறுத்துக்கட்டுகட்டி அவர்திருமுடிமேல் அந்த ச்சுமைபொறுமல் திருமுடிசாய்ந்துபோவதைக்கண் டு அப்பள்ளர்களே அந்தப்புற்சுமையை எடுத்துவந் துமேற்படிமடாலயத்துவெளியில்வைத்துப்போனார் கள் இந்தப்படி இரண்டுநாள்சென்றபின்பு மூன்றுவ துநாள் மேறபடி புற்சுமையை எடுத்துவந்தபள்ளன் இவர்சேதி முழுதும் கையேட்டுத்தம்பிரானுக்குத்தெ ரிவிக்க அமரும்இவர்கையறுப்புண்டசேதியை சுவா மிகளுக்குக்குறிப்பாகத்தெரிவிக்க அதுதெரிந்து சு வாமிகளும் குமாரதேவரைப்பார்த்து முனிவுகொள் ள அவரும்பயந்து பேசாமலிருந்துவிட்டார்.

பிற்பாடு அன்றுராத்திரி சுவாமிகள் கையேட்டுத் தம்பிரானையழைத்து அப்பா எங்களிருவருக்கும் வெவ்வேறேகட்டமுதுகட்டி ஒருதண்டத்தில் மாட் டி அரசனிடத்திற்கொடுத்து நம்மோடுகூட அனுப் பிவையென்று கட்டளையிட்டருள அவரும் அப்படி யே செய்து அனுப்பிவைக்க சுவாமிகள்முன்னும்கு மாரதேவர் பின்னுமாய்ப்போகையில்சிலதூரம்போ

ய் சுவாமிகள் இவரைத்திரும்பிப்பார்த்து என்னதா
மசமென்றகேட்ட அதுகேட்டு இவரும்பயந்து சுவாமீ
ஒருபுறம் அச்சிலிங்கம் மற்றொருபுறம் கஞுயுத்தமி
ருக்கின்றதே என்று சொல்ல அந்தக்குறிப்பறிந்துசு
வாமிகள் தமக்குத்தாமேமகிழ்ச்சியடைந்து பிறகு
அவிடத்திலுள்ள ஒருகுளக்கரைமேலிரங்கினார் அவி
டத்தில்இருவரும்ஒன்றாகஉட்கார்ந்து இரண்டன்ன
த்தையும் ஒன்றாகச்சேர்த்து ஸ்ரீகுமாரதேவர் சுவாமி
களுக்குப்பரிமாற மேற்படி சுவாமிகள் நைவேத்திய
ங்கொண்டபின்பு சேடமான மகாபிரசாதத்தைத்தா
மும உட்கொண்டு சிறிதுநேரம் அவிடத்தில் இருவ
ரும் வசனித்துக்கொண்டிருந்து பிற்பாடுமடாலயத்
திற்கு வந்துசேர்ந்து சிலநாள்கழித்து மேற்படி சுவா
மிகளிடத்தில் அனுக்கிரகம்பெற்றுக்கொண்டுசாத
னைசெய்து முதிர்ந்தகாலத்தில் ஒருநாள்சாந்தலிங்க
சுவாமிகள் இவனாமகாராஜாவென்று பெயரிட்டழை
த்து அப்பாநீவிருத்தாசலத்திற்குப்போகவேண்டுமெ
ன்று கட்டளையிட்டருள அங்ஙனே நல்லதென்று
விடைபெற்றுக்கொண்டுவிருத்தாசலத்தைநோக்கிவ
ருகிறவழியில் சின்னசேலத்திற்குக்கீழ்ப்புறமான்கா
ட்டில் இவர் நிமத்தம்அன்புகூர்ந்து பழமலைநாதரே
ஒருபிராமணரூபமாயெழுந்தருளிவந்து தண்ணீர்ப்ப
ந்தல்வைத்துக்கொண்டு இவரைக்கண்டு அப்பாநீ ஆ
யாசமாய்ப்போகிறபடியால் நால்வகைசலமுமிருக்கி
ன்றது உனக்குவேண்டியமட்டும்சாப்பிட்டு விடாய்
தீர்க்கலாமென்றுஉபசரித்துத்தண்ணீர்கொடுக்க அ

தைச்சாப்பிட்டுச் சாகசிவர்த்திச்செய்துக்கொண்டு விருத்தாசலம்வந்து சேர்ந்து மணிமுத்தாநதிக்கரையிலிருக்கின்றஅரசமரத்தின்கீழாயில் ஆயாசமாய்சயனித்துக்கொண்டு பிரமானந்தநித்திரையிலிருந்தருளினார் அது சேதிபெரியநாயகியாரறிந்து தனதபிடேகத்திற்குச் சுவணபாத்திரத்தில்வைத்திருந்த பசுவின்பாலேயேந்திக் கொண்டு ஓர்பிராமணஸ்திரியைப்போல் இவரிடத்தில்வந்து தலைப்பக்கத்திலுட்கார்ந்து தனது திருமடியின்மேல் இவரது திருமுடியைத்தூக்கிவைத்து அந்தப்பாலைபுகட்டின பின்பு இவர் ஆயாசந்தீர்ந்து கண்ணைவிழித்து நீ ஆரம்மாவென்று கேட்க அப்பாகுமாரதேவனே நான்பெரியநாயகி நீ என்னிடத்தில்தானே சுகமாயிருவென்று திருவாய்மலர்ந்தருளி உடனேமறைந்துவிட்டாள் இதைமேற்படிசடாமுனிகண்டு யாகத்தைவிட்டுக்கீழேயிறங்கிப்பிராமணஉருவங்கொண்டுவந்து வணங்கிநிற்க இவர் அந்தஜடாமுனியைக்கண்டு நீயாரென்றுகேட்டமாத்திரத்தில்ஜடாமுனிதனது சரித்திரமுழுதும்விவரமாகச் சொல்ல அதுகேட்டு குமாரதேவரும் சந்தோஷமாய் சடாமுனியின்சாபநிவர்த்திபண்ணி சிலதுநாள்அவிடத்தில்தானே கரபாத்திரம்பண்ணிக்கொண்டிருக்குங்காலத்தில் அவிடத்திலுள்ள ஒருகுடும்பியானவன் இவரையாரென்றறிந்து நாளதோறும் உண்மையாய்த் தரிசனம்பண்ணிக்கொண்டேவர அவனுக்கு நாளுக்குநாள்சகலசம்பத்தும் அபிவிர்த்தியடைந்துவருகையில் ஒருநாள் இவன்குமாரதேவரைப்பா

ர்த்து வணங்கி சுவாமீ அடியேனுக்கு ஏதேனும் ஓர் திருப்பணி கட்டளையிட்டருளவேண்டுமென்றுவரு ந்திக்கேட்க குமாரதேவரும் அப்பா அப்படிக்குண க்கிஷ்டமிருந்தால் ஸ்ரீபெரியநாயகியார் சந்நிதானத் திற்கெதிராக ஒருமண்டபங்கட்டிவையென்று கட்ட ளையிட்டருள அவனும்அப்படியேமகாபாக்கியமென் று மண்டபங்கட்டும்படி எத்தனித்துக்கட்டும்போது உத்திரக்கல்மேலோமல் வருத்தமடைந்து குமார தேவருக்குத்தெரிவிக்க குமாரதேவரும் விபூதியைக் கொடுத்து இதைஅந்தக்கல்லின்பேரில்போட்டுத்தூ க்கென்றுத்தரவுசெய்ய அப்படியேசெய்துமு டித்தபின்பு அந்தக்குடும்பியுஞ்சந்தோஷித்தனுக்கு மாரதேவரைவணங்கிநின்று சுவாமீதேவரீருடையபி ரபாவத்தைப்பின்னதென்றளவிட்டுச்சொல்லஆரால் ஆகுமென்று நானாவிதமாகத்தோத்திரஞ்செய்ய குமார தேவரும் அவனையழைத்துக்கொண்டுபோய்கோபுர வாயிலிற் செய்துவைத்திருக்கும் இரண்டுதுவாரபா லகருடைய முதுகும் உரைப்பட்டிருப்பதைக்காண் பித்து இவர்களுக்குத் தவனகஞ்சிகாய்ச்சிநைவேத் தியம்பண்ணென்றுகட்டளையிட்டருள அவனும்மகா பாக்கியமென்று அப்படியேசெய்வித்துக்கிருதகிருத் தியனானான்.

பிறகு ஒருநாள்குமாரதேவரும் ஓர்குடும்பிவீட்டு வாசலில் கரபாத்திரத்திற்குச் சென்றுகையேந்த அவ ர்கள்இவரதுமகிமையையறியாதவர்களாய் தங்கள்வீ ட்டில்சமைத்துவைத்திருந்த மச்சத்தை அன்னத்

தோடுகலந்து இவர்கையிற்பரிமாற அதுதெரிந்து ஸ்ரீகுமாரதேவரும் அங்ஙனே குளக்கரைக்குச்செல்ல அந்தமச்சம் உயிரோடுகுளத்திற்குதித்துப்போய்விட்டது.

இப்படியிருக்க ஒருகுஷ்டரோகியானவன் தனது தேகவருத்தம் நீங்கவேண்டுமென்று நாள்தோறும் இடைவிடாமல் ஸ்ரீகுமாரதேவரைக்கண்டு தரிசனம்பண்ணிக்கொண்டேவருகையில் ஒருநாள் அதிகவாதையினால் சகிக்கப்படாதவனாய் ஸ்ரீகுமாரதேவரது திருவடியில் வந்து விழுந்து கோவென்றுமுறையிட்டுச்சொல்ல அப்பா நாம்வயித்தியனல்லவே யென்று சொல்லசுவாமீ தேவரீரது திருக்கையினால்விபூதிகொடுத்தால் எனதுரோகம் நிவர்த்தியாகுமென்றிரங்கிக்கேட்க குமாரதேவருந்திருவுளமிரங்கி விபூதியையள்ளி அவனது இடக்கையில்வைத்து வலக்கையால்மூடிக்கொள்ளச்சொல்லி பழமலையார் சன்னிதானத்தினுள் ஒருமாடத்திலிருக்கும் விக்னேஸ்வரரைக்குறியாகக்காண்பித்து நீஅந்தவிக்னேஸ்வரர் முன்னே போய் இரண்டுகண்களையும் மூடிக்கொண்டு நின்று அங்கேநடக்கின்ற அதிசயத்தை நமக்குவந்துசொல்லென்றுகட்டளையிட்டருள அவனும் அப்படியே போய் நின்றமாத்திரத்தில் அவனுக்குச் சுழுத்தி போற்றோன்ற அத்தருணத்தில் அந்தவிநாயகக்கடவுள் தமதுதுதிக்கையைநீட்டி இவனது இடக்கையிலிருந்த விபூதியைத் தொட்டதுபோலக்கண்டு விழித்துச் சுவாமிகளிடத்திற்குவந்து விண்ணப்பஞ்செ

ய்தமாத்திரத்தில் குமாரதேவரும் ஆனந்தமாய் அந்தவிபூதியைத்தொட்டுத் தரித்துக்கொண்டு அவனையுந்தரித்துக்கொள்ளும்படி உத்தரவுசெய்ய அவன் அப்படியே தரித்துவருங்காலையில் அவனது குஷ்டரோகம் நிவிர்த்தியாகிச் சவுக்கியமடைந்தான்.

இப்படி யிருக்கின்றநாளையில் ஒருநாள் ஸ்ரீகுமாரதேவரும் திருவாரூர்மகோச்சவத்திற்குப் போயிருந்தபோது-ரதோச்சவத்தினன்றைக்கு, தியாகராயர் ரதமேறி மாடவீதிவருகையில் அந்தரதத்திற்கு நேரே குமாரதேவர்நின்று பார்த்துக்கொண்டிருப்பதை-இரண்டுசைவர்கள்கண்டு ஒருவர்க்கொருவர் விகடமாய வீரசைவமருளைப் பார்த்தீர்களோவென்று பேசிக்கொள்ள அந்தவிகடவார்த்தையைக் குமாரதேவர்கேட்டு ரதத்தில்வருந் தியாகராயரைப்பார்த்து (தியாகராயர்) வீரசைவம் மருளானல் ரதம்நடக்க அருளானல் ரதம்நிற்கவென்று திருவாய்மலர்ந்தருளிச் சிலதூரம்போய் ஒருமரத்தினீழலில் உட்கார்ந்திருந்தார். அதுதெரிந்து அத்திருவிழாவின் தர்மகர்த்தாவாகிய தஞ்சாவூர் அரசன் ரதமானது நிலைவந்துசேர்ந்தபிறகு போஜனஞ்செய்கிறதென்னும் நிச்சயமுடையவனாகலால் என்னசெய்வோமென்றச்சமுற்று இவ்விடத்தில்நடந்த ரகசியந்தெரியாதபடியினால்சாயங்காலபரியந்தமும் அந்தரதம் நடக்கும்படி அனேகபிரயெத்தினங்கள்செய்வித்தும் அஃதுசற்றாகிலும் அசையாதுநிற்க, பிறகு மேற்படி அரசன்இவ்விடத்தில் நடந்தரகசியத்தைக்கேள்விப்பட்டு ஸ்ரீகுமாரதே

வரிடத்திற்குவந்து அவனைக்கண்டுவணங்கி விண்ணை
ப்பஞ்செய்ய ஸ்ரீகுமாரதேவரும் அரசனைப்பார்த்து
இந்தமருளனிடத்தில் உங்களுக்கு என்ன அலுவல்
போங்களென்றுசொல்ல அரசனும் (சுவாமீ) இந்தப்
பிழையைமன்னித்து ரதத்தை நடப்பித்தருளவேண்
டுமென்று வெகுவாகத் தோத்திரஞ்செய்ய அதற்கு
ஸ்ரீகுமாரதேவரும திருவுளமிரங்கி அந்தராஜனுடனு
ஞ் சேனைகளுடனும் எழுந்தளிவந்து ரதத்தின்முன்
னே நின்று தியாகராயனைப்பார்த்து (தியாகராயசா)
வீரசைவம் அருளானால் ரதம்நடக்கமருளானால்ரதம்
நிற்கவென்று திருவாய் மலர்ந்தருளினமாத்திரத்தில்
ரதம் ஜனங்களில்லாமல் நடந்து நிலையிற்போய்ச்சேர்ந்தது.

இப்பால் குமாரதேவர் மறுபடியும் விருத்தசை
லஞ்வந்து அவ்வரசமடத்தின்கீழ் வாசம்பண்ணிக்கொ
ண்டிருக்குங்காலையில் பிறதேசத்திலுள்ள ஓர் மாந்தி
ரீகனொருவன்விருத்தசைலத்திலுள்ளபத்திரகாளியைய
த்தன்வசமாக்கிக்கொள்ள எண்ணி தனதுநாட்
டைவிட்டு மணிமுத்தாநதியின் வடதிசையாக வரு
கையில் அந்த பத்திரகாளியறிந்து அச்சமுற்றவளாய்
ஒருஸ்திரியைப்போல ஸ்ரீகுமாரதேவரிடத்திற்குவந்
து அவரைப் பிரதக்ஷணநமஸ்காரம்பண்ணி அவரு
க்கெதிரேநிற்க அதுகண்டு குமாரதேவரும் நீயாரெ
ன்றுவினவ; சுவாமீ நான்பத்திரகாளிஎன்னைமிந்தப்
பிரகாரஞ்செய்யும்படி ஓர்சண்டாளன் வருகிறான்
அதனால் பயந்துவந்தேனென்று விண்ணப்பஞ்செய்
ய அதற்கு குமாரதேவரும் என்றால் உனக்கு ஆக

வேண்டிய தென்னென்றுவினவ, பத்திரகாளியும்
சுவாமீ தேவரீரது திருவடிகளை அடியாள் சிரசின்
மேல்வைத்தால் எனது ஆபத்துநீங்குமென்று,விண்
ணப்பஞ்செய்ய, ஸ்ரீகுமாரதேவரும் திருவுளமிரங்கி
அங்ஙனே நல்லதென்று பத்திரகாளிசந்நிதிக் கெழு
ந்தருளிவந்து அந்தவிக்கிரகத்தின்முடிமேல தமது
திருவடியைத் தூக்கிவைத்தமாத்திரத்தில் அந்தமாந்
திரீகனுடைய இரண்டுகண்களும் அவன்மனம்போ
லவே இருளடைந்தது அதுதெரிந்து அந்தமாந்திரீக
னும் பயங்கொண்டு இந்தஸ்தலத்தில் பெரியவாள்
வாசஞ்செய்கிறப்போ லிருக்கிறதென்றெண்ணி அ
விடத்தில் விசாரிக்க ஸ்ரீகுமாரதேவரிருக்கிறதைக்
கேள்விப்பட்டு அவரிருக்குமிடந்தேடிவந்து அவரை
க்கண்டு வணங்கிநிற்க ஸ்ரீகுமாரதேவரும் அவனைப்
பார்த்து நீயாரென்றுவினவசுவாமீநான் மாந்திரிகன்
நான் இவிடந்நிற்கு இந்த உத்தேசமாயவந்தவிடத்
தில் எனக்கு இவ்வகையான ஆபத்துநேரிட்டது இ
தைத்தெரியாமோ தீர்த்தருளவேண்டுமென்று வெகு
வாசந் தோத்திரஞ்செய்துநிற்க ஸ்ரீகுமாரதேவரும்
சற்றே திருவுளமிரங்கி அடா உனசரீரமுள்ளவரை
யிலும் இந்த மாந்திரீகத்தைவிட்டிருப்பாயாகில்உன
க்கு ஒருகண்மாத்திரந்தெரியுமென்று ஆக்கியாபித்
திருளிய மாத்திரத்தில் அவனும்அப்படியேநல்லதெ
ன்று ஸ்ரீகுமாரதேவரது திருவடியைத்தொட்டுச்சொ
ன்னவளவில் ஒருகண்தெரிந்து தென்னுடையதேச
த்திற்குப்போய்விட்டான்.

இப்பால் ஒருகுடும்பியானவன் புத்திராபேக்ஷையி னால் ஸ்திரீயுந்தானும் நெடுநாளாய் விசனப்பட்டுக் கொண்டு ஸ்ரீகுமாரதேவரைக்கண்டு நாள்தோறுந் தரிசனம்பண்ணிவருகையில் ஒருநாள் குமாரதேவர் திருவுளமிரங்கி அக்குடும்பிக்குவிபூதியளிக்க அவ் விபூதி மன்னிலையால் அவர்களுக்கு இரண்டு ஆண்பி ள்ளைகள்பிறந்து அதுகள்வளர்ந்து ஐந்துவயதாகிப் பள்ளிக்கூடத்தில்வைத்து வித்தியாப்பியாசஞ் செய் வித்தபிறகு அந்தப்பிள்ளைகளுக்கு இலக்கணப்பிய சஞ்செய்விக்கவேண்டி இலக்கண வித்துவானாகிய சிதம்பரப்பிள்ளையென்பவரை மதுரையிலிருந்து வா வழைத்து அவ்இரண்டுபிள்ளைகளுக்கும் இலக்கண ப்பியாசஞ்செய்வித்துவருங்காலத்தில் ஒருநாள் ஸ்ரீ குமாரதேவர் குட்சிபாதைநிமித்தம் அந்தக்குடும்பி வீட்டுக்குவருகையில் மேற்படிசிதம்பரப்பிள்ளையெ ன்னும் உபாத்தியாயர் இவரிடத்தில் மதிப்பற்றிரு ந்ததைக்கண்டு அவரைத்தடுத்தாட்கொள் ளத் திருவுளங்கொண்டு அவரைநோக்கிஓர்வாக்கியத் தைக்கூறி அதற்குப்பயன்வினவ அவருக்கென்ன வி த்வசாமர்த்திய மிருந்தபோதினும் இந்தச்சந்நிதான த்தில் நாவெழாமையால் பயன்கூறாது மயங்கிநின்று சற்றேதெளிவுண்டாகி குமாரதேவரது திருவடியில் விழுந்து வணங்கி சுவாமீ அடிமையை ரட்சித்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து அதுமுதல் துறவுபூண்டு மேற்படி குமாரதேவரது பின்னாகவே சாலைபோற்றொடர்ந்து தானுங்காபாத்திரம் பண்

ணிக்கொண்டிருந்தார் அவரது ஆராமையையும்,மெ
ய்யன்பையும், குமாரதேவரறிந்து அவரைத்தமது
ஆசிரியரிருக்கும் திருப்போரூருக்குக்கூட்டிக்கொ
ண்டுநடந்து, மடாலயத்திற்குச் சமீபமாகப்போகை
யில்-விடியற்காலையாகையினுல் எழுந்திருந்து வெளி
யேவந்துநிற்கிற தம்பிரான்களைக்கண்டு சுவாமிகளி
ருக்குஞ் சமையமெப்படியென்று வினவ சுவாமிகள்
பாநிட்டையிலெழுந்தருளி யிருக்கின்றனெனக்கூற-
ஆனுல் நாம்பணிசெய்வோமென்றுநினைந்து ஸ்ரீகுமா
ரதேவர் சாணச்சட்டி யெடுத்துக்கொண்டு திருமெ
ழுகிட-சிதம்பரசுவாமிகளும் திருவலகெடுத்துக்கொ
ண்டு திருவலகிட்டார்-இத்திருப்பணிமுடித்தபின்பு
சுவாமிகள் திருக்கண்விழித்தருளிய சேதிதெரிந்து-
இவ்விருவர்களும் மடாலயத்துட்சென்றுசுவாமிகளை
க்கண்டு வணங்கிநிற்க-சுவாமிகளும் குமாரதேவரை
ப்பார்த்து அப்பா உன்னை யடுத்துநிற்கின்றவன் யா
ரென்றுவினவ-தென்னுட்டுச்சைவனென்றுசொல்ல
இவனை ஏனழைத்துவந்தாயென்றுகேட்க-அதற்குக்
குமாரதேவர் மௌனமாயிருந்துவிட்டார் - இப்படி
இரண்டு தினஞ்சென்றபின்பு சிதம்பரசுவாமிகளது
நடையைக்கையேட்டுத் தம்பிரானறிந்து சுவாமிகளை
வணங்கிநின்று (சுவாமீ) இந்தச்சைவன் மிகுந்தவல்
லவனுயிருக்கிறபடியால் இவனைத்திருவடிக்குஆளா
க்கிக்கொள்ளவேண்டுமென்ற விண்ணப்பஞ்செய்ய-
அதற்குச்சுவாமிகளும் மேற்படி தம்பிரானைப்பார்த்
து-அப்பா நமக்கிருக்கிற-சந்நதிபோதும் நமதுசந்ந

திக்குச் சந்ததி நெடுநாளாயில்லாதிருந்தது இப்போது கிடைத்தபடியால் அப்படியே - செய்விக்கவேண்டு மென்று-கட்டளையிட அதற்குத்தம்பிரான் மௌன மாயிருந்துவிட்டார்-இப்படி இரண்டுநாள் கழிந்தபி ன்பு-மூன்றாவதுநாள் சாந்தலிங்கசுவாமிகள் குமார தேவரை அழைத்து நீ ஊருக்குப்போவென்றுசொல் லகுமாரதேவரும் இவன் இவிடத்திலிருக்கட்டுமெ ன்றுவிண்ணப்பஞ்செய்ய - சுவாமிகள் இவிடத்தில் வேண்டாம் நீயேயழைத்துக்கொண்டு போவென்று சொல்ல ஸ்ரீகுமாரதேவரும் இவனைக்கொண்டுபோய் அடிமையென்ன செய்கிறதென்று கேட்க, சுவாமிகளு ம் ஸ்ரீகுமாரதேவரைப்பார்த்து அப்பா நீ இவனைக் கொண்டுபோய்ப்பக்குவமறிந்து உனக்குச்சொன்ன தை இவனுக்குச்சொல்லுவையென்று கட்டளையிட குமாரதேவரும் மகாப்பிரசாதமென்று-விடைபெற் றுக்கொண்டு இருவரும் விருத்தாசலம்வந்துசேர்ந்த பிறகு - சிதம்பரசுவாமிகளது பக்குவஞ்சோதித்து அநுக்கிரகஞ்செய்தருளினார். அவர்தான் திருப்போ ரூர்ச் சந்நிதானம் விளக்கிய சிதம்பரசுவாமிகள்.

இப்படி நடந்துவருங்காலத்தில் பெரியநாயகியா ரும் குமாரதேவரால் சாஸ்திரஞ்செய்விக்கும்படி தி ருவுளங்கொண்டு குமாரதேவரது யோகில்வந்து அப் பா குமாரதேவா, நீ சாஸ்திரஞ் சொல்லவேண்டுமெ ன்று திருவாய்மலர்ந்தருள-குமாரதேவரும் அம்மா அடிமையாற்சொல்ல முடியாதென்று விண்ணப்பஞ் செய்ய-பெரியநாயகியாரும் ஆனால் நாமே உனதுநா

ஷில்சின் றுசொல்லி முடிக்கிறோமென்று ஆக்கியா பித்து-அங்ஙனே இந்த ஷோடசமகாசாஸ்திரங்களை யுஞ் சொல்லி முடித்தருளினர்-இப்படி அனந்தமக த்துவங்களைச்செய்து அந்தத்தில் ஸ்ரீகுமாரதேவரும் சொரூபசாக்ஷாத்கார பரிபூரணநிலையை யடையுஞ் சமயமறிந்து-இரண்டாவது அடிமையாகிய ரெட்டி சிதம்பரசுவாமிகள் ஸ்ரீகுமாரதேவரைப்பார்த்து சு வாமிதேவர் பரிபூரணமானபின்பு அடியார்கள் தரி சனஞ்செய்து உய்யும்பொருட்டு தாந்திருப்பணிகட் டளையிட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய் ய அதற்கு ஸ்ரீகுமாரதேவர் நாம்நித்தம் சமாதியெ யிருக்கவேண்டுமென்று அகண்டபரிபூரண சாட் சாத்காரசொரூப வியாபகத்திற் கலந்தருளினர் இப் பால் ரெட்டி சிதம்பரசுவாமிகளும் ஸ்ரீபெரியநாயகி யாரர்த்தாரப்படி ஸ்ரீ குமாரதேவர் திருநாமத்தினால் கோயில்மடாலய முதலாகியதுசனுஞ் செய்வித்து பிறகுதாமும் பரிபூரணநிலையை யடைந்தருளினர்.

இஃது ஷெ சுவாமிகள் மரபிலுள்ள அடியார் களில் ஒருவரால் சுருக்கமாகத் தெரிந் தெழுதப்பட் டது.

ஸ்ரீ குமாரதேவர் சரித்திரம்

---

முற்றிற்று.



உ

வெற்றிவேலுற்றதுணை.

# நெஞ்சுவிடு தூது.



காப்பு.

தஞ்சமென்றோர்க்கின்பந் தருகுமரதேவன்மே
னெஞ்சுவிடுதூது நிகழ்த்தவே - விஞ்சும்
பழமலைவாழாழத் துப் பாழிமதவேழக்
கழலிணைவாழ்சீமே காப்பு.

பூவாய்த்தகற்பகப்பூம் பொங்கரிடத்திற்சிறந்தோன்
றூவாய்த்தசெங்கமலத் துள்ளிருந்தோன்-மாவய்த்த
மார்பகத்தோனுகமுற்றோர்வஞ்சகக்கூற்றைக்கடந்த
சீர்மிகுத்தகாயத் திறன்முனிவோ-ரோர்மிகுத்த
மாணிக்கப்பைவிரித்து வாழுரகர்பாருறைவோ
ராணிப்பொன்போன்ற மறைபாகமங்கள்-பேணி
யுருவேயருவே யொளியேவெளியே
தெருளேயருளே சிவமே-பொருளேயென்
றேத்துஞ்சுகசொருப மின்னருளேயோர்வடிவாய்
நாத்துதிசெய்பெரு நயந்தருளி-தீர்த்தமெனை
வந்தபிரானுயேன் மலதிமிரம்போக்குதற்கென்
சிந்தைகுடிகொண்ட செழுஞ்சோதி-வந்தனைசெய்
யன்பர்க்கெளியா னதிகவோயாயிடிலும்
வன்பர்க்கரிதாய மாணிக்க-மன்புக்க
மந்தரமேமந்தாக வாசுகியேபாணுகக்

சந்திரன்றானுக்கடலே தாழியா-வந்தார்தம்
வன்பிறகடைய வருமமுதம்போன்றெழா
தன்பிற்பெருகியெழு மாரமுதந்-துன்பத்
திரையாழிவீழ்ந்தவரைத் தீதரியாமுத்திக்
கரைமேல்விடுக்குமொரு கப்பல் விரவிவரு
மாகமேயாதி யனேகபிரபஞ்சமெலா
மேகமாய்க்காட்டு மெழிற்சித்தன்-மாகசுர
ரேமாக்கவெம்ம ஞரியாருமிருமாக்கக்
கோமாக்கருணைமழை கூர்மேகம்-பாமாரூங்
கண்டபொழுதேகசிந்து கசிந்துள்ளுருகித்
தொண்டுசெயமேவுஞ் சுவைக்கரும்பு-பண்டு
பிரமனகர்தை பிறங்காதடங்கப்
பரமயொளியாப் படர்ந்து-சிரமனந்த
கோடிபடைத்துக்குலவுலகெலாந்தாளுய்
மூடிநிலைபெற்றமுது ரியா-னீடிக்
குழிஞ்சியுணின்று குறவர்குடில்சாடி
மறிந்துவிழுமாலியானை மாய்த்துச்-செரிந்த
வகிலுங்கழைமணியு மந்திரையாளுந்திச்
சிகிசிறச்செம்பாளைவெப்பந் தீர்த்துப்-பகாரிய
மூல்லைபுகுந்து முடைகெழுமுமாய்ச்சியர்தம்
மல்லையொத்தமுல்லை பறித்தெறிந்தங்-கொல்லை
தயிர்ச்சாடிமதுதுடனே தாங்கிமருதத்

தியர்பள்ளரார்ப்ப வெழுந்து-வயற்புடைக
ளேரிகுளங்களெலா நிறைத்துநெய்தனிலஞ்
சாரவெழுந்து தகும்பரவர்-நேரும்
வலைமலையெலாந துணித்து வன்படவுதள்ளிக்
குலவுகடலோடுறவு கொண்டு-நிலவலைய
மாழமொடுநீள மளத்தற்கரிதாகி
யேழ்கடல்வெள்ளமெனச்சிறந்து-சூழ்குமவர்
தம்மையமுக்கறவே தான்றுடைத்தல்ன்றியுயிர்
வெம்மையமுக்குமிகந்துடைத்து-செம்மைதரு
வீட்டின்பவெள்ளத்து மேன்மைபெறவேமூழ்க
நாட்டுமணிமுத்தா நதியுடையான்-மீட்டரிய
மெத்துகடமாதி வெரும்பொய்கதிட்டானச்
சத்தெனுமோற்மேன்மைத் தகுநாடன்-மொய்த்து
வரும்பேருருவமாய் மன்னுபொருளெல்லா
மொருங்கேசுகமான வூரான்-விரும்பியமெயப்
பத்திப்பழவடியார் பைந்தமிழ்ச்சொன்மாமலரால்
வத்திக்கக்கட்டுபா மாலையான் முத்திபெற
வோரறிவுகாணுமிடத்தொன்றென்றுஞ்சுட்டாது
சேரறிவாய்நின்றமனச் செப்பரியா-னேர்மருவு
பக்குவனான்காரணபெரும் பாதங்கள்சோதிதர
மிக்கமறையாகமமாம் வெண்மணிகொண்-டுக்காத
விச்சைஞானங்கிரியையென்னுமுத்தானம்பொழிந்த

கச்சமறத்துறந்த லச்சையறற் றச்சமது (ங)
கோடாகவேர்த்திக் குளிர்கருணைமெய்யுணர்வாம்
விடாதகண்கண் மிகவிழித்துச்-சேடா
ரிரண்டற்றவத்துவித மென்னுங்கைநீட்டித்
தெருண்டதலம்பத்திச்செவிகொண்-டிருண்டபெரு
தத்துவசாலங்களெனுஞ் சாற்றுக்கவளமுண்ட ந்
சுத்தமெனுஞ்சீர்வாய் துலங்கவே-பொய்த்த
கருமவிக்கூட்டங் கடியாதுவிசுந்
தருமமாநல்வா றயங்க-வொருமையிலா
வாறுசமயக் குருடறியாத
வீறுபரிபூரணமா மேனியுடன்-கூறுமலம்
போகமுனிந்துயிரின் போதமழித்துத்தோன்று
மாகமிகளைத்துமறி மானையான்-றாகமுடன்
வந்துதனையடைந்தோர்வன்பவநோய்த்தீர்ப்பதற்கே
யந்தமறக்கட்டு மருட்கொடியான்-சந்ததமுஞ்
சேமநிதிபோற்றிகழ் மறைநான்கிற்சிறந்த
சாமமறையாந் தகுமுரசோன்-காமர்செறி
கஞ்சனும்வேளுங் கடுங்கூற்றுந்தன்னடியார்க்
கஞ்சனடாத்துதிரு வாணையான்-விஞ்சியபே
ரின்பமுளந்ததும்பவெல்லோருங்கொண்டாடு
நன்குமகாதேவனெனு நாமத்தான்-மன்பயிலுஞ்
சாதனநான்கானபெருஞ் சம்பத்தைக்கையிடித்து

மாதனமாதர் மனைதுறந்து-நிராசி
ருள்ளிருந்தஞானம் புறனுமுதித்தாங்கு
வெள்ளைவிபூதிறணிந்து மேனியெலாங்-கள்ளமுறு
காமனைவென்றதிருக கண்ணிற்பிறந்ததனுல்
யாமவனைவெல்லவதற்கி தாமென்று-நேமருசி
ரக்கமணிமாலை யதுநயித்துமவ்வுருப்பின்
மிக்கபணியாய் மிகப்பூண்டு-தொக்கபகை
கொல்வாமஞ்சற்றேய்த்துக் கூறைகொளுமாறவித்
வெல்வான்கருதும் விருதாக நல்லசெக்கர் (௯௩)
காவிதோய்துண்டங் கருதுமுழுநான்குகட்டி
மேவுகருவிப்படையைவெல்வதற்கு-தாவிலாக்
கச்சைகட்டினார்போற் கனவுதாபந்தனமே
லெச்சமறக்கட்டி யிடாப்பிறவி-யச்சம்
பிரிந்ததெனக்காட்டுமொரு பெற்றிபோற்றோன்றும்
விரிந்தசடைபின் ருழவிட்டு-திருந்து
முயரங்கமீதி லுயர்பரமலிங்கந்
செயலறவேதோன்றுந் திறம்போற்-பயனார்
மருமத்திலிங்க மகிமையுடன்தாங்கிக்
கருமத்துரிசு கழன்றே-யொருமித்த
நெஞ்சுடனேவிடுதொரு நீடுபிச்சையேதெனினும்
வஞ்சமறவேகாத்தில் வாங்கியுண்டு-விஞ்சுங்
குருபரனுமக்குமாரதேவன்பாற்

றிருவடிபெற்றன்ஞானந் திர்ந்தே-யுருநாம
முள்ளவேலாஞ்சந்சிற் சுகமாவொருங்குணர்ந்து
தெள்ளியபேரின்பவெள்ளந் தேக்கியே-விள்ளவிலா
தெல்லாஞ்சிவமாய்க்கண்டேபெற்றமாதவரு
மல்லார்திருவுடனே வாழ்ந்தாலு-நல்ல
விடையன் பாற்கும்ப மிருஞ்சென்னிதாங்கித் (க்)
தொடருமறிக்குட்டியுடன்றேற்பை-புடையெடுத்து
கம்பளந்தண்டாதி கைக்கொளினுமச்சென்னிக் (ன்)
கும்பமிலைசநெஞ்சுவைத்த கொள்கைபோ-லெம்பிரா
ருளிலெநெஞ்சுவைதது தாங்குடிம்பிபோனடிக்கு
மீள்கிலாவன் புடைய விந்நகரு-மாளாத்
தகைமையுடையோராய்ந் தக்கபணிசெய்தே.
யகமுமுகமுமலர் வாருஞ்-சுகசொரூப
மொன்றென்றசொன்னுலகமேதென்றிடவே
நின்றபழுதையிடை நீளரவ-மன்ற
வுதிக்குமாறப்பொருளி லுண்டாமென்றேத
விதித்தபழுதை விளங்கின்-மதிதபாம்
பேதமதுபோலெழிற் சிவங்கண்டும்முலக
மோசாதிதோன்ற லெனையென்ன-மோகமறக்
கானவிரீல்லையெனக் கண்டுநீதோன்றுதல்போ
லினமில்பொய்யாத் தோற்றுமென்றிசைப்ப-வானை
பழுதைபினிற்பாம்பும் பகர்கானனீரு

யெழுமோதகையா யிவைதாங்-குழுமியே
நாலுவாயோர்பொருளினன் ணுவமேதென் றிசைப்ப
வாறுதபொன் கண்ணி லாபரண-நாலு
கடமாதிதோன் றுமொரு காரணம்போற்றோற்றுந்
திடமாககொணென்று செப்பத்-திடவா
லொருவன்றொழிலா லுளவாமிவைதா
மருவுமிவையாவரால்வந்த-துரையெனவே
விண்ணினிடைப்பிலிவெயிறகுஞ்சந்தான் றுவபோ
லண்ணுமெனவே நயந்துரைபப-வெண்ணுமவ
பற்பலவாறாலும்பகருமொன்றேமிவைசாந் (கக)
துப்புடைநாலுவரிவாய்த் தோற்றுவதென்செப்புகெ
காந்தருவமானகர்போற் கானெவயங்கர்தான்
போந்தவிவகாரமின்றுப் பொய்யாகு-பேய்ந்த
விவற்றுள்விவகார மேய்தெவனென்னக்
கவற்றுள்கனவு விவ்கார-கவிற்றுதல்போ
லாமென்றுரைப்பவது நினைவின்வாதனையாந்
தோமுறுபொய்வாதனைதான் றாயதாய-சேமப்
பொருட்கேதெனவங்கப் பூரணத்திறமேன்றுங்
தருக்காநினைமாகுந் தானென்-றுரைப்ப
வதற்குநினைவெழுமோ யாதென்றுகேட்டுக்
கதித்தகனலில் கண்டா-யிதைப்பொய்யென்
றுன்னுதுகேட்டி யுளஞ்சற்றைசந்தக்கான்

மூன்றும்பரமுமுயிர்கண்மொய்த்தெழுந்த-மன்னு
வுலகமிவைதோன்று முளமிறந்தாலிந்தக்
கலகமெலாம்பொய்யாயக் கனதை-யிலகியதோர்
மெய்யொன்றேயாகு மிளிருமுளத்துருவ
நையாவுருவமொடு நாமமாம்-பொய்யுளந்தா
னுன்னினைவுநீதென்றே யூகத்தானோக்குமிடத்
தன்னினைவுநாமவுரு வாகுங்கா-ணந்நினைவு
கோடிகணைதிற் குதித்தெழலாலிவ்வுலகு
நாடற்கருமுருவ நாமமாய்ப்-பீடுபெறத்
தோற்றுவினைவைத் துணிந்தாற்சற்சிற்சுகமே
மாற்றற்கரிதாய் வயங்கலுருஞ்-சாற்றுமிதா
லுள்ளமேயிவ்வுலகா மிவ்வுலகேயுள்ளமா
முள்ளமலாதேயுலக மொன்றில்லை-யுள்ளே
மதுரந்தருஞ்சாத்தன் வன்கோயின்முன்னே
சதுரங்கமாபலமாத் தங்குங்-குதிரைநரி
தேராளனும்பெயருஞ் செப்பியபேர்கொள்ளுருவு
நேராதுபொய்யென்று நீக்கியபேதருமிடத்
துற்றிடுமுக்காலத்து முள்ளமண்ணைமற்றெல்லாம்
வெற்றவெறும்பொய்யாய் விடுமிவைபோற்-சொற்ற
பெயருருமானவெல்லாம் பேணாதுநீக்கிற்
செயிரறுசித்தொன்றே திகழு-மியல்பாங்
கடலிற்பிறைநுரை காண்டிவலைமொக்கு

ளிடமுற்றெழினுமிது பொய்-திடமுறுமெய்
யாவதெதுவென் றறியுமிடத்தப்பொருளின்
மேவுதிணைதனை வேண்டிவலே-தாவியெழு
மொக்குளெனும்பெயரும் மொழிபெயர்கொள்ளும்
மொக்கவெரும்பொய்யாமுருசியுடன்-றக்க (முருவு)
நெகிழ்ச்சிகுளிர்ச்சிமய நீரொன்றேமெய்யாம்
பக்குமவைபோலப்பாரிற் றேகைக்கரிதாய்க்
காணுமுருநாமங் காணுதுபொய்யாகு
மாணுறுசற்சிற்சுகமே வாய்மையாம்-மாணு
இருப்பதுசத்துச்சத்தா லெண்ணுருவநாம
மிருப்பதுபோற்றோன்றும் வேறில்லையுரைப்பரிதாய்
தோன்றுதல்சித்துச்சித்தாற்றோன்று முருநாமத் (த்)
தான்றனித்துத்தோன்றுவது தானில்லையான்றசுகந்
தானேயுளதிதனுற் றய்குமுருநாம
மானசுகம்போலனுகியிடு-நானேத
வேறேதுமில்லை விரிதிரையாதிகடாங்
கூறுசலமொன்றே குறிக்குங்காற்-றேறிர்
பொருளொன்றேயாகும் புனிதமுறுநெஞ்சாற்
றெருளொன்றிக்காணென்று செப்ப-வருளொன்று
நெஞ்சுடையாயென்று நிகழ்த்திவழுத்திப்பணிந்து
தஞ்சமெனப்பொருந்திச் சார்வாரு-மெஞ்சலிலா
தெம்மருங்குஞ்சூழ்ந்துவா வின்னியங்களை வகையின்

சும்மைகடலேன் றெனிகாட்ட-மெய்மைதரு
மோர்பரிபூரண வின்போர்வடிவாகிப்
பேரோதவந்தபிரான் வந்தான்-சூரான்
மிடியாயிருள்போக்கு மேதகையான்வந்தான்
வடிவாலுவமையிலான் வந்தா-னடியார்
பவத்துயரைமாற்றப் பரிந்துவந்தான்வந்தான்
றவத்தலைவர்சற்குறவன் வந்தா-னுவக்கு
முதுகிரியான்வந்தான முகிலனையான்வந்தான்
வதிதலுறுபேறின்பன் வந்தா னதிக
கவிராசர்போற்றுங் கனைகழலான்வந்தான்
றவிராததண்ணளியான் வந்தா-னவியாத
ஞானகிரணமுறு நற்சூரியன்வந்தா
னீனமொன்றுமில்லா விறைவந்தான்-றேனனைய
நற்குமாரதேவனெனு ஞானபரன்வந்தானென்
றெற்பெருகுசின்ன மெடுத்தியம்பச்-சொற்பிரமன்
முன்னோராமாய்முடி காணானிவ்விடிரண்டே
ழன்னமாக்கானகுவலென்றுங்கொழல்போல்பொன்
கவரிபுடையிரட்டக்கண்டோர்க்கிவனைத் [சூர்
தவரில்லையில்லையென்று சாற்று-முவமையா
வாலவட்டம்வீச வடியார்கலங்கவோய்
சாலவொட்டாதோட்டுந்தலைகைமயா-மேலு
மௌனதுகளங்கழுந்தி ரென்றிந்துவந்து

தனதுபணிசெய்யுந்தகைபோ-லினமருவு
முத்துக்குடைநிழற்ற முத்திபெறவேண்டுமென்றே
ரித்திசைவாரீர் வாரீரென்றெண்ணு-மொயத்து
காத்தாலழைப்பதுபோற் காணூர்கொடிக
ளூடாத்தாறபோலெவ்விடத்து மோங்க-வுடைப்பரீ
மெய்யர்கரமாமேக மென்மலர்களாம்பெரிய [ய
துய்யமழையெங்குஞ் சொரியவே-செய்ய
மறைமுடிவுகாட்டு மணியேயெமது
குறைதவிரவந்த பெருங்கோவே-நிறையு
மதியேசெழும்பாகே வானமுதேசீரோ
ததியேயுலகுயிர்க்கோர் தாயே-கதியேயெந்
தாதையேசெந்தருவே தண்ணளியேநாயடியேன்
றீதையேபோக்குமிருந் தெய்வமே-யோதுட்
டிமிரதிவாகரனே செய்யமுதுகுன்றிற்
குமரதேவேயென்று கூறித்-தமிழ்தெரிந்த
வந்திகர்பல்லாண்டிசைப்ப மாமகரதோரணமுஞ்
செந்திருவுமோங்குந் திருமறுகி-லந்தணளி
மோனந்தயங்கிமொழி பொருளெல்லாந்தானு
மானந்தபோதகமீ தாங்கேறித்-தானந்
தவங்கள்சிறப்பத் தகுகுமரதேவ
னுவந்துபவனிவர வுற்ற-நவஞ்சேரு
மவ்வீதியுள்ளோ ரனைவோரும்வந்துவந்து

செவ்விபெறவே செறிந்தெங்குந்-தவ்வாத
விம்மேனிகொண்டதிவ னெம்மனோருள்ளிருந்த
பொய்ம்மையகறவென்றே புகழ்வார்-பெம்மானே
யோர்வடிவுகொண்டதிது வுண்மையாமெங்ஙனெனி
லோர்வடிவாற்காணலா மென்பாருந்-தேர்வரிய
பூரணமாநோக்குவிழிப் புண்டரிகனென்பாரு
மேரிணைக்குப்பேரின்ப னென்பாருஞ்-சீரிணங்கு
கற்றோர்க்கினிய கரும்புகாணென்பாரு
முற்றுனமக்கிவனென் றோர்வாரு-முற்று
விளமையானென்பாரு மெம்போல்வார்க்குற்ற
வளமையானென்பாரு மாகிப்-புளகமுடன்
கொள்ளப்பணிந்தவர்கள் கொண்டாடும்வேலரனி
னள்ளத்தமியேனு மன்னியே-விள்ளாது [ருந்
மின்னிரண்டுமொய்த்ததொரு மென்மைபோலேமினி
தென்றிரண்டுபின்றாழ்ந்த செஞ்சடையு-நன்றிதரு
மூன்றுபிறைநிரையாமொய்த்ததெனப்புண்டரஞ்சே
ரான்றதிருநெற்றி யழகிணையுந்-தோன்றுந்
துளக்கமிலாமதிபோற் சோதிமுகமும்
வளக்கமலநோக்கிணையின் வாகுங்-கிளக்குமறை
யஞ்சமுதித்தவகழகு சருநாசியையும்
விஞ்சோர்மொழிமலர்வாய் மென்னகையுந்-தஞ்சமு
மந்தரமோரிரண்டின் மாமுடியேலோரிரண்டு [யு
சுந்தரபானு துலங்குவபோற்-சந்தமுறுங்
காதிணையிற்பூண்ட கனகசெப்புக்குண்டலங்க
ளேதறவேகாட்டுமிரு திண்புயமு-மோதவிடம்

போக்கிமிளிரும்புனிதத் திருமிடறு
நோக்கிணைக்கின்பென்ற நலன்மார்பு-நீக்கரிதா
மையந்திரிவகற்றி யச்சமறநிச்சயஞ்சொற்
செயயமுறைகொண்ட திருக்கரமு-மையலுறு
சிவபாமிரண்டிற்றேருமிடத் தேகமென்று
மேவிபசின்முத்திரைகொண்மென்கரமுந்-தாவிலாச்
செக்கர்வானம்பவளச் செம்மலையை சூழ்ந்ததுபோற்
றக்ககாவிந்துகில்சேர்தண்ணிடையுந்-தொக்கவதின்
மேலொருமின்சூழ்ந்து விளங்குதல்போலத்திகழு
மேலுதரபந்தனத்தி னின்னழகுஞ்-சாலவே
பற்றுவிடாத பழவடியார்க்கின்பவெள்ளம்
வற்றுதளிக்கு மலர்ப்பதமு-நற்றவரு
மாணிக்கமால்வரைமேல் வண்டுசுபோர்த்ததுபோற்
காணுந்திருநீறுங் காப்பணிந்தே-யாணிப்பொன்
மேனியையும்மேனி மீதிலேயக்கமணி
யானிலாலிங்க மணமத்தனையு-நானேதக்
கண்ணிணைக்கோரின்னமுதாக் கண்டுபணிந்தேத்தி
யுண்ணெகிழ்வுதோன்றாதுபோதி-லெண்ணாவொரு
பொய்யொலாநிற்ப வினையேனைத்தானேச்சி
னையபனருண்மாலளித்தா னன்றுமுதற-றுய்ய
வவன்றருமின்பம்பெறவே யாசைமிகக்கொண்டே
னவந்தவன்பாற்றூதுவிட வுன்போ-லிவந்த
கடல்சூழுலகனைந்துங் காண்கிலேனெஞ்சே
யிடர்போக்குந்தூதா யின்றுத் திடமாகச்
செல்லவேவேண்டுஞ் சிறியேனுயிர்த்துணையே

நல்லவெனக்குநவ் நாயகமே-புல்லறிவா
னேயேன்பிறந்திருந்த நாளெல்லாமென்னுடனே
நீயேபிரியாது நின்றதனு-னீயேயென்
றூதையுந்தாயுந் தமரும்பெறுநட்புஞ்
சூதையேசெய்வார் துணைவரோ-நீதயவா
யென்பாலொருமித்திங் கேகாந்தமாயிருந்தா
லுன்போலுமென்போலுமொப்பாரா-ருன்பெருமை
யாகமமூமாரணமூ மாளபலகலையு
மியோகிகளுந்தாமே யுணாக்குங்காண்-மோகக்
கருத்தடங்கினமுத்தியது கையகமிற்கட்டென்
றுரைத்ததாலுமைக்கன்றுன்னி-விரித்து
புகழ்ந்ததலவே புகலரியநெஞ்சே
மிகுந்தபிறப்பு விடென்னுந்-தகுந்தொகைக்குக்
காரணமுநீயே கருதுமுலகமெலா
மேரிணங்குநின்னையல்லா தில்லைகாண்-பாரிணக்கு
நீசற்றசைந்தா னிகழுமுலகாகு
நீசற்றுந்தோன்றாது நின்றக்கான்-மாசற்ற
மெய்ச்சிவமேயாகு மினிருமிதாலுன்பெருமை
யச்சிவந்தானே யறியுங்காண்-மெச்சு
முறவாலுயர்வா லுனைப்போலெனக்குப்
பிறிதாருளரதனாற்பேணி-யறவாழி
யான்குமரதேவன்பா லன்புடனே தூதுசெல்ல
நான்கருதியுன்பா ணவிற்றினே-னியான்புகலு
மவ்விறைவனென்று மமருமிடஞ்சொல்லக்கேண்
மௌவன்மணக்கு மலர்ச்சோலை-செவ்விதரு

முத்தாநதிசூழ் முதுகிரியாமாங்குநீ
வித்தாரமாச்செல்லும் வேலைதனிற்-கத்துஞ்
சமயமெனும்பொயவேடர் தம்மைமிகநாடி
யாருமுறவாமென் றணுகேல்-கமைவி
லரிவையர்தாமென் றியம்பு மாமரவைநாடேல்
கருதுயிடயமெனுங் காலின்-பருவு
நெறிதப்பிப்போயதனு ணின்றுமயங்கேல்
பொறிமத்தமாவொடுபோ ராடேல்-செறிவுற்ற
காமமெனும்பங்கத்திற் காலிடேல்கோபமெனுந்
தாமவழன்மிதித்துத் துள்ளியிடே-னுமவுரு
முன்பின்புடைபெயர்நது முன்னிநோக்காதேயி
யன்மெலாமோருருவ யானவரு-மின்பமய
மாகிருப்போரு மரியதவச்செல்வர்களு
மேகமெனுந் துவளினை யெய்தினரு-மோகமறு
வீரசைவநாயகரும் வேதமுனிவரரு
மோராகமசைவ வுத்தமரும்-பாரோரு
நாற்றிசையுஞ்சூழுவவர் நாப்பணுடெச்சூழ
மேற்றிகழுமிர்ந் து விளங்குதல்போற்-போற்றுங்
குமாரதேவென்னுமிருநா கோமானிருப்ப
னமாவென்றவன் சபையை நாடி-யெமாலன்பு
தன்னடிக்கீழ்வைக்கத் தருகருணை செய்தானைப்
பொன்னடியைசென்னிபொறித்தானை-மன்னு
பவளமலையுபயபாரிசத்துஞ்செம்மை
திவளருவி தூங்குந்திறம்போ-னவமார்
கழுநீர்த்தொடையல் கலந்தபுயத்தானை

வழுத்தபாமாலைமன்னைத்-தொழுவார்க்கு
வேண்டியவேண்டிய வெல்லாமிகவளிக்கு
மீண்டியதெய்வமிருந்தருளை-மாண்டியா
வானந்தச்செல்வமளிக்குஞ்சிந்தாமணியை
வானர்ந்திக்கவருமாதவத்தாத்-தினனே
னேதுபிழைசெய்தாலு மேழையேனுக்கிரங்கித்
திதஞ்சிவனென்னுத தெய்வத்தை-யோதும்
பழமலையான்பாகம் பதியாவிளமை
யழகுடனேவாழுமுமை தம்மை வழுவாது
தந்தச்சிதானந்த சாகரத்தினூடாடுஞ்
செந்திருவாழுங்குமா தேசிகனைச்-சிந்தைநீ
பொன்னேமரகதமே பூரணமேயாரணமே
யன்னேமுதுகிரியா ராமுதே-மன்னேயென்
றேத்திப்பணிந்தங் கெழுந்துகாஞ்சிரமேற்
சேர்த்துப்பின்கைகட்டிச்சென்றுநின்று-தீர்த்தனே
யுன்பவனிகண்டங் குனதுகடைக்கண்ணோக்க
மன்புடனேபெற்ற வரிவைதா-னின்பம்
பெறுவதலாலவிதைப் பேரிருளில்வாடி
யுறுவளோயாவு முந்திக்கச்-செறியும்
பகுதியெனும்பௌவத்துப் பாடொலியினாலே
மிகுதிவருந்துவளோ பேணி-யகமென்று
மூலவகங்காரமெனு மூரிமதவேளினாற்
சாலமயங்கத் தருவளோ-கோலியே
கத்துசமயக்குயிலின் காரொலியாலானந்த
நித்திரைபண்ணாது நிகழ்வளோ-சுத்தமுறுஞ்

சாத்திகமாயையெனுஞ் சந்திரனல்வெம்புவளோ
காத்தாள்வாய்மற்றிவளைக் காணென்றே-யாத்தன்
றிருவடியில்விண்ணப்பஞ் செய்துவணங்கி
யிருமைதருமிவ்வுலக மெல்லா-மொருங்குபெறு
பேரின்பமாகியென்றும் போகிருந்தவிந்தச்
சீரின்பநாயேன் செறிந்தோங்கத்-தாரன்பா
யின்றிவளுக்கீதலெழில்வள்ளாலென்றியம்பி
நன்றெனவேசம்மதிப்ப நன்குரைத்து-மன்றலுறு
சற்குமரதேவன் றருங்குவளைமாலைநெஞ்சே
யிற்பெறவேவாங்கிவா-வினறு. ஆக-௩௱௮௩.

நெஞ்சுவிடுதூது-முற்றிற்று.

---

தூது.

எவ்வுயிர்க்குந்தாயா யிருந்தின்பமுதளிக்குஞ்
செவ்விதருசற்குமர தேவன்பா-லவ்வியந்தீர்
நெஞ்சமேசெங்குவளை நீண்மாலைவாங்கிவாச்
செஞ்சவேதூதாகிச் செல்.

ஸ்ரீகுமாரதேவாயநம:

—*—

உ

குருவேதுணை.

# குமாரதேவர்

அருளிச்செய்த

சாத்திரங்கள்பதினாறினுள்

முதலாவது

## மகாராஜாதுறவு

காப்பு.

அமரர்கள்பரவுந் திருமுதுகுன்றி
லாழ்ந்துப்பிள்ளையைச்சிகரிக்
குமரசற்குருவை யிமகிரிராஜ
குமாரியாம் பெரியநாயகியை
மும்மலமுமொருங்கே யகற்றிடுமுக்கண்
முதல்வனைச் சாந்தநாயகனை
நமதென்னைப்படியே முடிந்திடத்தினமும்
நாடிநின்றிறைஞ்சி வாழ்த்துவாம்



# குருவணக்கம்.

மறைமுடிவதனில் விளங்கிடுமொளியே
மனிதனைப் போலவந்தெனது
சிறைதவிர்த்தாண்ட சிவப்பிரகாச
தேசிகன்றன்னை மற்றவன்றன்
நறைமலரடியைப் போற்றிடுஞ்சாந்த
நாயகன்றன்னை மற்றவன்றன்
நிறையருள்பெற்ற பழனியாமுனிவை
நெஞ்சினு ளிருத்தியேபணிவாம்.

---

ஆழத்துப்பிள்ளையார்துதி.

தொய்யின் முலைக்கோடிரண்டுகவான்
றுதிகலைகமூன்றுவிழிதுரிசில்
துய்யசைவமுதன்மதமுந்
துலங்கவருமொண்பிடியுலகம்
உய்யவுதவுமொருகளிற்றை
யுலவாவிருத்தசைவத்தில்
வையம்பரவுமாழத்து
வாழைங்கரனைமனநினைவாம். (க)

வேறு-விருத்தாம்பிகைதுதி.

இருட்கலிவலியின் ஞானநன்னெறிக
ளிறந்துயிர்கொடுநெறிமேவி
மருட்கொடுகலங்கா வகைகலியென்றும்

வந்தனுகாப்பதிதன்னில்
தெருட்சத்திக்கருணை யுருவதாய்நின்று
தெளிவிக்குமிறைவியெங்குருவோர்
அருட்கடல்பெரிய நாயகியுலகுக்
கனைமுதல்வியைப்பணிந்திடுவாம். (உ)

சபாநாயகர்துதி.

திங்களார்சடையிற் கங்கைநீர்துளிப்பத்
திருந்திழையுமையுளங்களிப்பப்
பொங்கராவொடுநற் புலிமுனிவர்கண்மால்
போதயனமரர்கள்போற்றத்
துங்கநான்மறைகடுதித்திடவைந்து
தொழில்விரிந்திடப்பொதுவதனிற்
செங்கமலதிர நடஞ்செயும்பொருளைந்
தினம்பணிந்திடரொழித்திடுவாம். (௩)

வேறு-சிவகாமியம்மைதுதி.

அருவுருவாயுயிர்கடமக்கன்னையாகி
யஞ்ஞானந்தனையகற்றியமலமாகி
மருளிலதாய்மெய்ஞ்ஞானமாகுமுத்தி
வாயத்திடவேகாத்தருளிவானோர்த
இருள்கடவேமிளிருமிருங்கழல்களார்ப்ப
விறைபுரியுந்திருநடத்தாற்களித்துவாழும்
தெருண்மருவுமறைநான்கும்பரவுந்தில்லைச்
சிவகாமசுந்தரியைச் சிந்தைசெய்வாம். (௪)

### வேறு-விநாயகர் துதி.

செக்கர்போன் றொளிர் முக்கட் சிலம்பினை
மிக்கபேரருள்வேலை யோர்கொம்பால
நக்கவன்பர்க்குதவுங்கருவினை
இக்கணைசிறைவேற விறைஞ்சுவாம். (௫)

### வேறு-சுப்பிரமணியர் துதி.

கடிகமழ்கரியகூந்தற்
கனிமொழித்துவர்வாய்த்தெய்வப்
பிடிதனக்கோட்டால்வள்ளிப்
பெண்கொடிபடருஞ்செய்ய
படிபுகழ்புயமாங்குன்றிற்
பாயவன்கழுநீர்நீப
மடலவிழ்செழுந்தார்ச்செவ்வேண்
மலரடிவணக்கஞ்செய்வாம். (௬)

### வேறு-அடியார் துதி.

வண்டுழாயலங்கன் மாயவன் மலர்மேல்
வதிந்தநான்முகன் மறையறியாத்
தொன்னடைவாய்க்கெண்டைவிழிக்கழைமொழியெம்
டொடியிடையுமையையோரிடத்தில் [ண்
கொண்டனோனருளைப் பொருளெனக்கருதிக்
குலவியசாதனந்தரித்து
மண்டியவடியார் யாவர்மற்றவர்தாள்
மனத்தினுஞ்சிரத்தினும்வைப்பாம். (௭)

### வேறு-அவையடக்கம்.

சகரர்தம்வலியையுந் தடந்திரைக்கடல்
அகலமும்பின்புளோ ரகழிலஞ்சிதான்
புகழுறவிளக்கலே போலவிச்செயுள்
நகைதருகலைஞர்நூ றனைவிளக்குமால். (அ)

### வேறு-நூன்முதலியபொருளும்-நூற்பயனும் நூலாசிரியர்பெயரும்.

திங்களொண்கவிகைத் திசிரியந்திணிதோள்
　　திகழ்கடற்றுளைமாராஜன்
அருகன்மாலிலத்திற் றுறந்துவீடடைந்த
　　வரியலிக்காதையைத்தமிழால்
இக்குமாநவத்தோ ரிசையுமென்றிசைப்ப
　　விசைத்தனன்விறுதக்கேட்டோர்
கொங்கவிழ்பொழில்சூழ் பட்டீஸ்புறையுங்
　　குமாரதேவென்னுமாமுனியே. (கூ)

### வேறு-வாழ்த்து.

சிவன்றிருவுருவானமைந்து சின்மயவெழுத்தும்வாழி
நவந்தருநீறும்வாழி நயனாகன்மணியும்வாழி
கவின்றருங்குமாரதேவன் கழலிணையிரண்டும்வாழி
அவன்றிருவடியார்தம்மோ டாருயிரனைத்தும்வாழி.

பாயிர-முற்றிற்று.

நைமிசாரணியரிஷிகள்.
மகாராஜன்சரித்திரஞ்சொல்லும்படிகேட்கச்
சூதர்சொல்லத்தொடங்கல்.

திருக்கிளர்நைமிசாரணியத்திற்
றங்கியமுனிவர்கள்சூதன்
வரப்பணிந்தேத்திக் கதைகள்பறபலவா
வகுத்துரைத்தனை மகாராஜன்
திருக்கதையெங்கட் குரைத்திலையதுநீ
செப்பனச்சுருதியிற்சொல்லும்
சுருக்கமில்காதை யிதுவெனத்தொகுத்துத்
தோமறக்கேண்மினென்றுரைக்கும். (௰க)

இது-முதல்-எ-பாட்டும் அரசன்சிறப்பு.

குழைத்தரண்சினைத்தே மாவினெண்களித்தேதன்
குலவியபலவிளைப்பலத்தேதன்
தழைத்திடுகதலிப் பழஞ்சொருத்திடுதேதன்
ருன்றிர்ண்டிலஞ்சுபிற்றதும்பி
விழுத்தகுவயலிற் பாய்தரவிளையு
மிகுகருநாடதேசந்தான்
இழைத்தநற்றவத்தா லுயிரொலாம்புரந்தங்
கிருந்தரசாளுமோர்குரிசில். (௰உ)

வேறு.

மிஞ்சமரிஞ்சிசூழ்மாபுரத்திருந்
தெஞ்சலிலெண்டிசை யிறைவர்தாடொழத்
தஞ்சமென்றடைந்தவர் தம்மைக்காத்திகல்
வஞ்சகர்க்காய்மகா ராஜமன்னனே. (௰௩)

வேறு.

கருங்கிழலரசுவைகுஞ்
சதமகன்றிருவின்மிக்கான்
உருவினின்மனிதன்மிக்கா
னுலத்தினிற்பலத்ததோளான்
செருவினிலரியேறன்னான்
றேனொடுஞ்சிறும்பாட
முருகுடைந்தொழுகுந்தாரான்
மூவுலகளிக்கும்வேலான். (௧௪)

வேறு.

அரசர்வந்திடுதிறை யளக்குமுன்றிலான்
முரசுகளனுதின முழங்குமன்றலான்
கரைபொருதிரையெறி கடலந்தானையான்
அருவரைமார்பினன்யாளிமொய்ம்பினன். (௧௫)
அரசர்தம்முடியுழு தவிருந்தாளினன்
எரிதவழ்திகிரியை யேந்துந்தோளினன்
மருவலர்வலியினை மாற்றும்வாளினன்
தருநிதிக்கொடையினன் றருக்குநாளினே. (௧௬)

வேறு.

கவரியோடாலவட்டங் காரிகையார்கள்வீசப்
பவளவாயபம்பையன்னர் பாசடையுதவமூத்தத்
தவளவாணகையார்கீதந் தனிநடஞ்செயபநின்று
குவலயமன்னர்போற்றக்குணகடற்றூனைசூழ. (௧எ)
இந்திராலயம்போலிலங்கியமண்டபத்தில்
சுந்தரமிருகராஜன்சுமகதபூவணையின்மீது

வர்திருந்தவனிதன்னை மனுநெறிமுறையிற்சாந்தே,
அந்தமில்போகந்துய்த்தங்கிருந்திடுமரசர்கோமான். (

அரசன்றனக்குப் புதல்வ னின்மையால்
வியாகுலமுற்றது.

தாம்புடைப்பிறையெயிறுறுதனுத்திரியிராயிரந்தோட்
பாம்பிறைப்பரிக்கவுற்றபாரினைப்பரிக்கப்பின்னர்
மேம்படுபுதல்வர்நந்தம்வயிறுடைவயிற்றிலெலென்று
தேம்படுதெரியன்மார்பன்சிந்தையாகுலங்களுற்றான்

இது முதல்-உ-பாட்டும் தீர்த்தயாத்திரை
முதலியபுண்ணியங்களை செய்தமை.

கங்கையேமுதலாமிக்கக்கடவுண்மாநதியிற்றோய்ந்து
ம், பங்கயாசனன்மாலிங்கட் பவளவார்சடையான்ற
ன்னை, அங்கையார்பூசைசெய்து மதிதிகட்களித்துத்தீ
யில், பொங்குமாகுதிகளீத்தும் பூவலம்வந்துந்தேவர்

ஆலயஞ்சாலையக்கிராமநந்தனவனங்கள், கோலமாரி
லஞ்சிகூபங் குளம்பலசெயதுமீரொட்டேனுமாதான
த்தோடேயிரணியமுதலீரைந்து, சாலநற்றனமீந்து
த் தருமமென்றோன்குசெய்தும். (உக)

இது-முதல்-உ-பாட்டும்
புத்திரோற்பத்தியும் சாதகன்மமுதலியன
செய்தமையும்.

தவம்பலபுரிந்துவேந்தன்
றனையனைப்பூத்தபின்னர
பவந்தனைத்துடைத்தேன்மேலாம்

பரமநற்பதமுமுண்டென்
றுவந்துசாதககன்மத்தோ
டொழிவருகருமெல்லாம்
நவந்தரச்செய்துநாம
நன்மகாராஜனென்றே. (௨௨)

வேறு,

வேதநீதியிற்கூறிவியன்றர
ஓதவெண்ணெண்கலையுமுணர்த்துவித்
தேதமற்றகுரவற்கிரணியம்
போதுமென்னப்பொழிந்தனன்கொண்டல்போல். ()

இரதபரீக்ஷைமுதலியவற்றிற்
பயிற்றுவித்தபின்-விவாகத்துக்குப்
பிரயத்தனஞ்செய்தமை,

கொடிநெருக்குங் கொடிஞ்சியந்தேர்பரி
கடமலிந்த கம்பமொன்றிவிகைபிப்
படியிலூரப் பயிற்றுவித்தாசிலா
வடிவிலங்கு மகற்குமணஞ்செய்வான். (௨௩)

அரசர்களுக்கு விவாகபத்திரமனுப்புதல்,

மடங்கலன்னபலமுள்ளமாமன்னன்
இடங்கொளெண்ணெழுதேசநிறைவர்க்கும்
முடங்கல்போக்கினன்கண்டுமுடிமன்னர்
கடங்கொள்சேனைகள்சூழ்வரச்சார்ந்தனர். (௨௫)

வேறு-இது-முதல்-உ-பாட்டும்
நகரமலங்கரித்தல்,

வடிகொள்வெண்சுதையாற் பித்திகைதிற்றி
வானுறமணிக்கொடிநிரைத்துக்
கடிநறுஞ்சாந்தங் குங்குமந்தன்னாற்
கமழ்தரமறுகெலாமெழுகிப்
பொடிகொள்சிந்துரத்தாற் கோலமேபுனைந்து
பூமலர்பொரிநனிசிதறிக்
கொடிகொண்முதெயின்மன் மாடமொண்சிகரி
கோதறப்புதுக்கியேகுலவ. (உசு)

வேறு,

கதலியங்கமுகுநட்டுக் சாவணமலங்கரித்துப்
புதியதோரணங்கள்கட்டிப் பொற்குடஞ்செறித்துத்
தீபம்,இதமுறவெங்குமவைத்தே யிந்திரனகாம்போ
ல, மதுமலர்த்தாமநாற்றி மாபுரியலங்கரித்தார். (உஎ)

இது-முதல்-ங-பாட்டும்-பெண்ணின்சிறப்பும்
விவாகஞ்செய்தலும்-வேறு,

வில்விலங்குகைவேந்தர்மரபினில்
நல்லசாமுத்திரிகதானன்கதாச்
சொல்விலக்கணத்தோடுதுரிசிலா
முல்லைமாலைமுறாகுவிரியவே, (உஅ)

வேறு,

மூவல்கதனிலுள்ளமுகிழ்மு லைக்கருங்கட்செவ்வாய்
பாவையொழிலிற்போதன் பகுத்தெடுத்துபிரோடே

ய், ஓவியர் தீட்டினனென்றுலகினிதுரைக்கச்செய்ய
பூவுறைதிருவிரும்பும்பொற்புடனவதரித்தே. (உ௯)

வேறு,

இலங்கியவாலொண் டளிர்குழைத்தினிய
விருதனக்கோங்கிணையரம்பி
நலங்கிளராம்பல் குமிழ்குருவனை
நண்ணுசெஞ்சரோருகம்பூத்துத்
துலங்கியபுயலைச் சுமந்திருதாளாத்
தோமிலாமின்னென நுடங்கிப்
பலந்தரப்படருங் கொடியினைவேதப்
பண்பினின்மன்றல்செய்வித்தே. (௩௰)

மகாராஜனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்தல்,

வேறு.

அருந்ததிகணவன் முதன்முனிவரர்க
ளருமறைக்கிழவர்கடம்மால்
பொருந்தியகங்கைப் பூம்புனலாட்டிப்
பொன்னவமணிகளரற்குயின்ற
விரிந்திடுமடங்கன் மென்றவிசேற்றி
மிளிர்நவமணிமுடிகவித்துப்
பருந்தடர்வேலான் பௌவமார்புவியைப்
பரிவொடுந்தோன்றல்பாலளித்தான். (௩௧)

மகாராஜன் மனைவியோடுவாழ்ந்திருந்தானெனச்
சூதர்சொன்னமைகேட்டு ரிஷிகள்பின்னும்
வினவச் சூதர்சொல்லத் தொடங்கல்.

சோகமேயின்றி யிருந்தனன்வேந்தன்

றேன்றலும்பார்பொதுநீக்கி
ஏகமாயச்செங்கோ லெங்கணுஞ்செல்ல
வேண்டிசைவிசயமுஞ்செய்தே
மாகநாடென்னப் போகமேநுய்த்து
மடந்தையோடிருந்தன னொன்றான்
வாகைவேலவன்பி னென்னசெய்தானென
மறையவர்க்குயர்முனிவருக்குரும். (௩௨)
இது-முதல்-உ-பாட்டும்-மகாராஜன்முந்திக்கு
ஞானமே சாதனமென் றுணர்தல்,
மனைவியுந்தானு மோர்நினைவாகி
மாறுபாடின்றியோர்காலும்
தனைபுணர்யோகி தந்தைதாய்கடவு
டங்களையறுதினமிறைஞ்சி
அனைவருரைத்த நெறிதவின்டந்து
மருத்தங்கண்மனதினிற்றரித்தும்
வினையமதுடனே நான்மறையவரை
வினவியுஞ்சிலபகல்போக்கி (௩௩)
தனியிடமதனி லிருந்திருவர்களுந்
தங்களிற்றாமுணர்ந்துசாவித்
துனிசெய்மாமாயைப் பிறப்பதுநீங்கிச்
சுகமதையடைந்தனுதினமும்
இனிமையதாக விருக்கலாஞானத்
தென்றெண்ணிஞானிகட்சார்ந்து
நனியவர்பாத பூசனைபுரிந்து
நாடொறும்வினவினர்நன்றாய், (௩௪)

ஃமூது-மூதல்-௩-ப்பாட்டும்-அந்தஞானம் சற்குருசே
வையன்றி விளங்காதெனத் துணிதல்.

இருவரிலரசன் றனக்கறிவோங்க
விருவகைச்சார்வையுமகற்றித்
தருவுடற்காவ றனையுங்கைவிடுத்துக்
கருத்தசையாதுமெய்யுணர்வை
மருவிடிலகப்பற் றற்றுமேல்வீடு
வாய்த்திடுமதற்குமெய்ஞ்ஞானக்
குருவருளின்றி விளங்கிடாதெனவே
கொண்டனன்மனந்தினிற்றுணிவே, (௩௫)

மனைதனிலாசை பொருந்தியேயின்று
மருளமயின்ஞானியாமெனவே
தனைமிகமகிப்போன் றன்னைவந்தொருவன்
றந்திடுஞானமென்றிரந்து
வினைவன்மட்டையினைப் பருகுவோன்றன்னை
வேண்டித்தென்னம்பழந்தனையே
இனம்பணித்திரிவோன் புத்திபோன்மெனவே
யியம்புவர்முற்றுணர்பெரியோர், (௩௬)

வேதவாகமசாத்திரபுராணங்கள்
விளங்கவேகற்றுணர்ந்தவற்றைத்
தீதறவெவர்க்குந் தெளிவுறவோதிச்
செப்பியநவநெறியதனில்
சாதகமிலாத குருவினையொருவன்
றானடைந்தானந்தம்வினவல்

ஏதமாங்கழுதை கன்னிக்குங்குமத்தி
னியல்புகேட்டிடுதல்போன்மென்றே, (௧௭)

சற்குருவையடைந்து விண்ணப்பங்கூறல்

சீவர்களிடத்தி லருள்சிவபத்தி
திருந்தியதுறவுமெய்ஞ்ஞானம்
ஆவதோர்வடிவாம் வேதமாமுனியை
யமலவாரணியத்திலடைந்தே
தேவர்கடேவே துன்பமோர்காலுந்
தென்றிடாமுத்திதானெய்திச்
சாவதும்பிறப்பு நீங்குமோர்நெறியைச்
சாற்றெனத்தாழ்ந்திடமுனிவன். (௧௮)

சற்குருமகாராஜனுக்கு உபதேசித்தல்,

இருவகைச்சார்வாம் புறப்பற்றைநீக்கி
யிச்சையின்மிட்டிவினைவு
மொருவியேயுடற்கா வலையுங்கைவிடுத்தே
யுட்கரணங்கள்வாதனையும்
குருவருளெறியே யொடுக்கிடில்விடுங்
கூடுந்தானுகைவேபவத்தின்
கருவிழிந்திடுமிந் நெறியினையநீவினைவிற்
ணைக்கொண்டுசெல்லெனவுரைத்தான், (௨௰)

மகாராஜன் சிலகாலத்தின்பின் தனித்திருந்து
உபதேசமொழிகளைச் சிந்தித்தல்,

அந்நெறிகுருவா லையமுந்திரிவு
மகன்றிடத்துணிவதாக்கேட்டு
முன்னெறியானவரசியற்கையினின்

முயன்றனன் சிறிதுநாளொருநாட்
பின்னெறியதனைநினைந்தனைவரையும்
பெயர்ந்திடவிடைகொடுத்தரசன்
மன்னெறிக்கோலமகன்றந்நப்புரத்தில்
வதிந்தனனொருவனாய்த்தனித்தே. (௪௰)

இது-முதல்-௨-பாட்டும் தன்னைவந்துகண்ட-அரசர்முதலாயினோர்க்கு இனி அரசியற்றலை வேண்டாது துறவுபூண்டுவீட்டைடைவேனெனக்கூறல்.

அரசர்களமைச்சர்புரோகிதர்பெரியோ
ரனைவருமவ்விடத்தேகி
அரசனைநோக்கிக்கிருத்தியகரும
மகன்றுவாளாவிருந்திடுதல்
அரசிலக்கணமன்றெனவர்வேண்ட
வவர்களைநோக்கியேவேந்தன்
அரசியற்கையினைவேண்டலனென்னை
யறியவேவேண்டினனன்றே (௪௧)

ஆண்டதோரசுதனிலும்போகத்து
மாசையற்றேனினிவேண்டேன்
மாண்டதோர்வனத்தி லொருவனாய்த்தனித்தே
மனத்தசைவறுத்துவீட்டைடைவேன்
பூண்டவென்மனமிங்கினித்திரும்பாது
போகத்தைப்பொருளெனவெண்ணி
வேண்டலனீங்களரசனுவேறே
விதித்துக்கொளுங்களென்றுரைத்தான் (௪௨)

இது- முதல் ௩-பாட்டும்-இராச்சியத்தை விடலாகா தென மந்திரிமார்வற்புறுத்த-மகாராஜன் இராச்சியத் தின் துன்பமும் முத்தியினின்பமுமுணர்த்தல்,

ஆதியினின்று தானைதயுகினேய
யாகினினிளமையிற் சூட்டத்
தீதின்றியுணர்புபவசிமையினிற்
செகமதைத் தாங்கினேயினிமேல்
நீதியினுணிய மதியினுதரவி
னின்னைப்போலொருவர்மற்றுளரோ
ஈதியற்கையதன் றிவ்வுடலுடனே
யிசசெல்வமன் றிவேறுளதோ, (௪௩)

அலறுநீயெனி னவனியுங்காப்பற்
றவத்திலேபலிர்ந்திடும்யாமும்
சலனமதுறவே மித்தகையெமை நீ
தவிக்கவிட்டேகுதல்கடனன்
றிலகிடவெமக்கி தருளெனவமைச்ச
ரியம்பிடவாசனும்பார்த்தே
உலகமெய்யெனவென்றுறுமதியுடையோர்க்
குரைப்பினுமுணர்வுதியாதால், (௪௪)

இவ்வரசியற்கை யப்பமற்றிதனு
லெய்திடுந்துன்பமிக்கவின்
றவ்வகையதனை யூகமின்மையினு
லறிகிலீர்நீங்களின்பென்றோ
எவ்வகைகினைந்தி ரினியெக்காலுங்கட்
கிதின்பமலதெனத்தோன்றும்

ஒவ்வமற்றிதனுக் கூசுமேதோன்று
துங்களுக்குலகயூகுதிக்கும். (௪௫)

மகாராஜன் நகரைவிட்டுப் போம்போது
நகரத்தார் போயழுதல்.

என்றுமற்றனேக யாவிரித்தரச
னெடுத்தஙமச்சரகடமக்கியம்பி
நின்றுபின்னவரை நிலுமெனவிருந்தி
நிதிதுனும்பொன்மனேவிடுத்தே
சென்றுபின்னகர வீதியினடக்கத்
திரண்டனேவர்களும்பின்றொடர்ந்து
வன்றுயரடைந்து வாடியேமெலிந்து
வாரியினோசையினழுதார். (௪௬)

இது-முதல்-உ-பாட்டும்-நகரத்தாருடைய
துக்கத்தைச் சார்திபண்ணல்.

அவரவர்வினையினவரவர்வருவா
ரவரவர்வினையளவுக்கே
அவரவர்போகமென்றதேயாயி
னுருக்கார்துணையதாகுவர்கள்
அவரவர்தேகமுளபொழுதுடனே
யாதரவானநாடி
அவரவரடைதனெறிகன்மத்தடையு
மாதரவாதரவாமோ (௪௭)

வினையுளவளவுங்கூடியேநிற்கும்
வினையகன்றிடிற்பிரிந்திடுமால்

